முழுப்பதிப்புரிமையுடையது

அந்தரங்கமானது

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த. (சாதாரண தர)ப் பரீட்சை - 2020

## 22 - தமிழ் மொழியும் இலக்கியமும்

### புள்ளியிடும் திட்டம்



இது விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன.

# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
# க.பொ.த. ( சாதாரண தர)ப் பரீட்சை - 2020
# 22 - தமிழ்மொழியும் இலக்கியமும்
## புள்ளித்திட்டம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **பகுதி** I | - | 1 x 40 | | | = **40 புள்ளிகள்** |

**பகுதி** II

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 01 ஆம் வினா | - | 10 x 2 | = | 20 புள்ளிகள் | |
| 02 ஆம் வினா | - | | = | 25 புள்ளிகள் | |
| 03 ஆம் வினா | - | | = | 10 புள்ளிகள் | |
| 04 ஆம் வினா | - | | = | 10 புள்ளிகள் | |
| 05 ஆம் வினா | - | | = | 15 புள்ளிகள் | |
| **மொத்தம்** | | | | | = **80 புள்ளிகள்** |

**பகுதி** III

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 01 ஆம் வினா | - | 10 x 2 | = | 20 புள்ளிகள் | |
| 02 ஆம் வினா | - | 04 x 5 | = | 20 புள்ளிகள் | |
| 03 ஆம் வினா | - | | = | 15 புள்ளிகள் | |
| 04 ஆம் வினா | - | | = | 15 புள்ளிகள் | |
| 05 ஆம் வினா<br>06 ஆம் வினா<br>07 ஆம் வினா | } | ஏதேனும் ஒன்று எழுதியிருந்தால் | = | 10 புள்ளிகள் | |
| **மொத்தம்** | | | | | = **80 புள்ளிகள்** |

**யைக் கணித்தல்**

| | | | |
|---|---|---|---|
| **பத்திரம்** I | = | **40** | **புள்ளிகள்** |
| **பத்திரம்** II | = | **80** | **புள்ளிகள்** |
| **பத்திரம்** III | = | **80** | **புள்ளிகள்** |
| **மொத்தம்** | = | **200** | **புள்ளிகள்** |
| | | | |
| **இறுதிப்புள்ளிகள்** | = | **200 ÷ 2** | |
| | = | **100** | |

# க.பொ.த (சா.தர)ப் பரீட்சை - 2020

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடலுக்கான பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. சகல உதவிப் பரீட்சகர்களும் விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற மைப் பேனாவை பயன்படுத்தவும்.
2. பிரதம பரீட்சகர் ஊதாநிற மைப்பேனாவைப் பயன்படுத்த வேண்டும்.
3. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
4. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, ஒப்பம் இடவும்.
5. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பின்னங்களாக பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் ☐ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.
6. எண்கணித பரிசோதகர் புள்ளிகளைச் சரிபார்ப்பதற்கு நீல அல்லது கறுப்பு நிறமைப் பேனாவைப் பயன்படுத்த வேண்டும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ..................................................................................
..................................................................................
.................................................................................. ✓ 4/5

(ii) ..................................................................................
..................................................................................
.................................................................................. ✓ 3/5

(iii) ..................................................................................
..................................................................................
..............5.................................................................. ✓ 3

**மொத்தம்** ⟶ 10/15

**பல்தேர்வு விடைத்தாள்**

**1. துளைத்தாள் தயாரித்தல்**

I. புள்ளி வழங்கும் திட்டத்தின் படி சரியான தெரிவைத் துளைத்தாளில் அடையாளமிடவும்.

II அவ்வாறு அடையாளமிடப்பட்ட இடத்தை வெட்டி நீக்கித் துளைத்தாளைத் தயாரிக்கவும்.

III துளைத்தாளை விடைகளின் மீது சரியாக வைத்துக்கொள்ளக்கூடியதாகச் சுட்டெண் அடைப்பையும் வெட்டி நீக்கவும். சரியான விடைகளின் எண்ணிக்கையைக் காட்டும் அடைப்பையும் வெட்டி நீக்கவும்.

IV சரியான, பிழையான விடைகளை குறிப்பிடக்கூடியதாக ஒவ்வொரு வரிசைக்கும் இறுதியில் வெற்று நிரையொன்றை வெட்டி ஏற்படுத்திக் கொள்ளவும்.

V **வெட்டிக்கொண்ட துளைத்தாளில் பிரதம பரீட்சகரிடம் கையொப்பம் பெற்று அங்கீகரித்துக் கொள்ளவும்.**

2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை × அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் எழுதவும். அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும். புள்ளி பரிவர்த்தனை செய்யும் சந்தர்ப்பங்களில் பரிவர்த்தனை செய்யப்பட்ட புள்ளியை உரிய கூட்டினுள் எழுதவும்.

**கட்டமைப்பு கட்டுரை மற்றும் கட்டுரை விடைத்தாள்கள்**

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். **பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.**
2. புள்ளிகளை குறிப்பிடும்போது ஓவலண்ட் கடதாசியின் வலது பக்க நிரலைப் பயன்படுத்தவும்.
3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக **2 இலக்கங்களில் பதியவும்.** வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.
4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதவும்.

✶ **புள்ளிப்பட்டியல் தயாரித்தல்**

I. ஒரு வினாப்பத்திரம் மாத்திரம் உள்ள பாடங்கள் தவிர ஏனைய சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது.

II. ஒவ்வொரு வினாப்பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியான புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும்.

III. வினாப்பத்திரம் I இற்கான புள்ளி புள்ளிப்பட்டியலில் "**Total Marks**" என்ற நிரலில் **பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும்.**

IV. வினாப்பத்திரம் II இற்கான புள்ளிப் பட்டியலை தயார் செய்யும்போது பகுதிப் புள்ளிகளைப் பதிவதோடு வினாப்பத்திரம் II இன் இறுதிப் புள்ளிகளை புள்ளிப் பட்டியலில் "**Total Marks**"

V. ...ம் வினாப்பத்திரம் III க்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து **எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.**

VI. 21 - சிங்களமொழியும் இலக்கியமும், 22 - தமிழ்மொழியும் இலக்கியமும் ஆகிய இரு பாடங்களும் வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளி புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். வினாப்பத்திரம் II, III இற்கான பகுதிப்புள்ளிகளை உள்ளடக்கி அவ் வினாப்பத்திரத்தின் மொத்தப் புள்ளிகளை, புள்ளிப்பட்டியலில் பதிய வேண்டும்.

**முக்கிய குறிப்பு :**

I. சகல சந்தர்ப்பங்களிலும் ஒவ்வொரு வினாப்பத்திரத்திற்கும் உரிய முழுப்புள்ளியானது முழுத்தானத்தில் புள்ளி பட்டியலில் பதியப்படுதல் வேண்டும். எந்தவிதமான காரணங்களிற்காகவும் வினாப்பத்திரத்தின் இறுதிப்புள்ளியானது தசம தானங்களில் பதியப்படலாகாது.

II. புள்ளிப் பட்டியலின் சகல பக்கங்களிலும் புள்ளிகளைப் பதிந்து உதவிப் பரீட்சகர், புள்ளிகளை சரிபார்த்த உதவிப் பரீட்சகர், மதிப்பீட்டுப் புள்ளிகளை உறுதிப்படுத்தும் எண்கணித பரீட்சகர் மற்றும் பிரதம பரீட்சகர் தமது குறியீட்டு இலக்கத்தை எழுதி கையொப்பமிட்டு உறுதிப்படுத்துவது கட்டாயமாகும்.

ooo

## புள்ளி வழங்கும் திட்டம்

| | | |
|---|---|---|
| வினாத்தாள் I | - | 40 புள்ளிகள் |
| வினாத்தாள் II | - | 80 புள்ளிகள் |
| வினாத்தாள் III | - | 80 புள்ளிகள் |
| மொத்தம் | - | 200 புள்ளிகள் |
| இறுதிப்புள்ளிகள் | - | $\frac{200}{2}$ புள்ளிகள் |
| | - | **100 புள்ளிகள்** |

## மிக முக்கியம்

அறிவுறுத்தல்களுக்கேற்ப வினாக்களைத் தெரிவு செய்திருக்க வேண்டும். மேலதிகமாக எழுதப்படும் விடைகள் பரீட்சார்த்திகளினால் வெட்டிவிடப்படாத சந்தர்ப்பங்களில் எழுதப்பட்டுள்ள சகல விடைகளுக்கும் புள்ளி வழங்கப்பட வேண்டும். பின்னர் சகல புள்ளிகளையும் முதற்பக்கத்தில் பதிய வேண்டும். அதில் அறிவுறுத்தல்களுக்கு மேலதிகமாக எழுதப்பட்ட விடைகளுக்கான புள்ளிகளை வெட்டி இறுதிப் புள்ளி கணிக்கப்பட வேண்டும்.

தமிழ்மொழியும் இலக்கியமும் I, II, III ஆகிய விடைத்தாள்களை மதிப்பிட்டு அவற்றின் புள்ளிகளை விடைத்தாள் II இல் பதிவு செய்து இறுதிப் புள்ளியைக் கணிக்குக.

## வினாத்தாள் I

**நோக்கங்கள்**

1. பரீட்சார்த்திகளது மொழிவள ஆற்றல்களை மதிப்பிடுதல்.
2. சொற்களையும் கலைச்சொற்களையும் சொற்றொடர்களையும் பொருத்தமான இடங்களில் பயன்படுத்தலைப் பரீட்சித்தல்.
3. பிரயோக இலக்கண அறிவினைக் கணிப்பிடல்.
4. இலக்கண வழுவின்றி வாக்கியங்களை அமைக்கும் திறனை மதிப்பிடல்.
5. எழுத்துப் பிழையின்றி எழுதும் திறனைக் கணிப்பிடல்.
6. உரைப்பகுதிகளை வாசித்துக் கிரகிக்கும் ஆற்றலை மதிப்பிடுதல்.
7. வாக்கியங்களைக் கருத்துத் தொடர்பில் ஒழுங்குபடுத்திப் பந்தியாக்கஞ் செய்யும் திறனைக் கணிப்பிடல்.

**வினாத்தாள் I இற்குப் புள்ளியிடுவதற்கான அறிவுறுத்தல்கள்:**

1. முதலில் வினாத்தாள் I இற்கான விடைத்தாள்களைப் பார்வையிட்டு ஒரு வினாவிற்கு விடையாக ஒரு புள்ளடி மட்டுமே இடப்பட்டுள்ளதா என்பதை உறுதிப்படுத்துக. ஒரு வினாவிற்கு விடையாக ஒன்றிற்கு மேற்பட்ட புள்ளடிகள் இடப்பட்டிருப்பின் அவற்றைக் குறுக்கே வெட்டிவிடுக.

2. விடைகளுக்கு மேல் சரி, பிழை என்ற அடையாளத்தை இடாமல், அவ்விடைகளுக்கு எதிரே சரி, பிழை என்ற அடையாளத்தைத் தெளிவாக இடுக.

3. விடைகளைச் சரி, பிழை பார்ப்பதற்காக உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள பரீட்சார்த்தியின் விடைத்தாளின் இலக்கங்கள் தெரியும் வண்ணம் வெட்டித் துளைத்தாள் ஒன்றைத் தயாரித்துக் கொள்க.

4. பரீட்சார்த்தியின் விடைத்தாளிலே விடைக்கூடுகளின் வரிசைகளுக்கு இடப்பக்கத்தில் சரி, பிழை என்னும் அடையாளத்தை இடுக.

5. ஒவ்வொரு வரிசைக்குக் கீழும் சரியான எண்ணிக்கையை இலக்கத்தில் எழுதுக.

6. ஒவ்வொரு வரிசைக்குக் கீழும் உள்ள எண்ணிக்கைகளின் மொத்தத்தைக் கூட்டி உரிய கூட்டினுள் எழுதுக.

7. சரியான விடைகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு புள்ளி வீதம் கொடுக்கப்பட்ட புள்ளிகளை விடைத்தாளின் வலது பக்க கீழ் மூலையில், உரிய கூட்டினுள் இலக்கத்தில் எழுதுக. அப்புள்ளிகளே முதலாம் வினாத்தாளுக்குரிய மொத்தப்புள்ளி என்பதைக் காட்டுவதற்காக வலதுபக்க கூட்டினுள் எழுதவும்.

   உதாரணம் $\frac{35}{40}$

8. முதலாம் வினாத்தாளிற்கான புள்ளிகளை இரண்டாம் வினாத்தாளுக்கு மாற்றும் போது மிக்க அவதானம் தேவை.

   **முக்கிய குறிப்பு** :- பரீட்சார்த்திகள் சரியான விடையைக் குறிப்பதற்கு O என்பன போன்ற அடையாளங்களை கையாண்டாலோ, விடையளிப்பதற்குக் கொடுக்கப்பட்ட தாளிலன்றி விடையெழுதும் தாளில் எழுதினாலோ, விடைத்தாளில் விடையளித்தாலோ புள்ளி வழங்குக.

**22 T I, II**

**අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2020**
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2020**
**General Certificate of Education (Ord. Level) Examination, 2020**

දෙමළ භාෂාව හා සාහිත්‍යය **I, II**
**தமிழ் மொழியும் இலக்கியமும் I, II**
Tamil Language and Literature **I, II**

පැය තුනයි
***மூன்று மணித்தியாலம்***
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
**மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்**
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

## தமிழ் மொழியும் இலக்கியமும் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக. வினாத்தாள் **I** இற்குரிய புள்ளிகள் **40** ஆகும்.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினா ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள ஏனைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, பின்பற்றுக.

● **தடித்த எழுத்தில்** அமைந்த சொல் பற்றிய வினாவுக்குப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

**1.** 'நித்திலப் புன்னகைச் சுடர் வீசிட......' - இங்கு **நித்திலம்** என்பது
(1) நிலம் (2) மல்லிகை (3) பவளம் (4) முத்து

**2.** 'தேனருவி திரையெழும்பி வானின்வழி யொழுகும்' - இங்கு **திரை** என்பது
(1) அலை (2) மறைப்பு (3) நீர் (4) ஆடை

**3.** 'மஞ்சோனா மரம் மிக அடர்த்தியாய் காற்றுக்குத் தலைவிரித்தாடி ஒய்யாரமாய் நின்றது.' - **அடர்த்தி** என்பதன் எதிர்க்கருத்து
(1) நெருக்கம் (2) ஐது (3) செறிவு (4) நொய்து

**4.** 'சிறுமீன் சினையினும் நுண்ணிதே' - **நுண்மை** என்பதன் எதிர்க்கருத்து
(1) அருமை (2) பருமை (3) சிறுமை (4) வெறுமை

**5.** 'என் மிதமிஞ்சிய பயந்தாங்கொள்ளிப் பட்டத்தை நான் எரித்தாயிற்று' - இங்கு **மிதமிஞ்சிய** என்பதன் பொருள்
(1) அளவுக்கதிகமான (2) மிகப்பெரிய
(3) மிக மோசமான (4) சரியளவான

● பின்வரும் வினா ஒவ்வொன்றுக்கும் **பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.

**6.** பின்வருவனவற்றுள் **தொடர்பற்ற** சொற்களின் இணைப்பு
(1) பிரபுக்கள் - குருமார் (2) நீதிபதி - வழக்கறிஞர்
(3) ஆசிரியர் - மாணவர் (4) பெற்றோர் - பிள்ளைகள்

**7.** பொருளால் **வேறுபட்ட** சொற்களைக் கொண்ட தொகுதி
(1) ஞாயிறு, பகலவன், ஆதவன் (2) துயில், உறக்கம், துஞ்சல்
(3) கங்குல், பகல், மதியம் (4) தாரகை, உடு, விண்மீன்

**8.** மாருதம், பவனம், வளி என்னும் சொற்கள் குறிக்கும் பொருள்
(1) நிலம் (2) நீர் (3) காற்று (4) நெருப்பு

**9.** 'வெப்சைற்' (Website) என்பதற்கு நிகராகத் தமிழில் வழங்கும் கலைச்சொல்
(1) இணையம் (2) வலைத்தளம் (3) மின்னஞ்சல் (4) முகநூல்

**10.** இளமை குறித்த 'பிள்ளை' என்ற மரபுப் பெயருக்குப் **பொருத்தமற்றது**
(1) கீரி (2) தென்னை (3) பனை (4) கமுகு

**11.** 'அதன் வீரப்பிரதாபங்களைப் பற்றி ஒரு பரணி பாடினார்.' - இங்கு **பரணி** என்பது
(1) புகழ் (2) மெய்க்கீர்த்தி
(3) வம்சாவளி (4) சாசனம்

**12.** எதிர்ப்பொருள் தரும் சொற்களால் அமைந்த இணைமொழி
(1) அரைகுறை (2) ஆதியந்தம் (3) ஆடிப்பாடி (4) அக்கம்பக்கம்

**13.** துன்பங்களைப் பொருட்படுத்தாது, எடுத்த காரியத்தை முடிப்பதற்கு மேற்கொள்ளும் தீவிர முயற்சியை விசேடிப்பதற்கு அடைமொழியாகக் கையாளத்தக்க அருஞ்சொற்றொடர்
(1) அகமும் முகமும் மலர்ந்து (2) அருமை பெருமை அறிந்து
(3) ஊண் உறக்கம் இன்றி (4) நன்மை தீமை நாடி

**14.** அரிச்சுவடியில் உள்ள எழுத்துமுறைப்படி சொற்களை நிரற்படுத்தி, சொற்களின் பொருளைத் தரும் நூல்
(1) நிகண்டு (2) கலைக்களஞ்சியம்
(3) சொற்றொகுதி (4) அகராதி

**15.** கூறவந்த விடயத்தோடு **தொடர்பில்லாத** விடயங்களைக் கூறுதல்
(1) குன்றக்கூறல் (2) மற்றொன்று விரித்தல்
(3) கூறியது கூறல் (4) மிகைபடக் கூறல்

**16.** 'அஞ்சிலே வளையாதது ஐம்பதிலே வளையுமா?' என்ற பழமொழிக்கு மிக நெருக்கமான பிறிதொரு பழமொழி
(1) ஆறிலும் சாவு நூறிலும் சாவு (2) தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்
(3) இளமையிற் கல்வி சிலையில் எழுத்து (4) நாய்வாலை நிமிர்த்த முடியாது

**17.** 'தகுதியற்றவர்களிடம் சேரும் அரும்பொருள் அழிவுக்குள்ளாகும்' என்பதை வலியுறுத்தும் உவமைத் தொடர்
(1) ஆடத் தெரியாதவன் முற்றம் கோணல் என்றது போல
(2) ஆற்றிற் கரைத்த புளி போல
(3) குரங்கின் கைப் பூமாலை போல
(4) காட்டில் எறித்த நிலாப் போல

**18.** 'ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி' என்ற தொடரால் உணர்த்தப்படுவன
(1) செழிப்பும் நிலைபேறும் (2) பசுமையும் இளமையும்
(3) அழகும் இளமையும் (4) உயரமும் ஆழமும்

**19.** 'அழகான நடைவண்டி அசைந்தாடும் கிலுகிலுப்பை' - கிலுகிலுப்பை என்ற சொல்லில் உள்ள **கிலுகிலு** என்பது
(1) இணைமொழி (2) அடுக்குத்தொடர்
(3) இரட்டைக்கிளவி (4) அடுக்கிடுக்குத்தொடர்

**20.** 'நாத் தோம் இல் உரை பதற கதும் என உற்றெழுந்து' - இத்தொடரில் இடம்பெற்றுள்ள விரைவுப் பொருள் தரும் ஒலிக்குறிப்புச் சொல்
(1) தோம் (2) கதும் (3) பதற (4) உற்று

● பின்வரும் வினா ஒவ்வொன்றுக்கும் **மிகச் சரியான** விடையைத் தெரிவுசெய்க.

**21.** ககரம் 'h' என்னும் ஆங்கில எழுத்துக்கு நிகராக ஒலிக்கும் சொல்
(1) கடல் (2) ஆக்கம் (3) மங்கை (4) ஆகம்

**22.** பின்வருவனவற்றுள் இடைநிலை பெற்றமைந்த பெயர்ப் பகுபதம்
(1) உண்டான் (2) பொங்கும் (3) அறிஞன் (4) அரசன்

**23.** பின்வருவனவற்றுள் பெயரடை
(1) குறைவாக (2) இனிமையான (3) விரைந்து (4) விரைவில்

**24.** பின்வருவனவற்றுள் வேற்றுமைப் பொருளால் வேறுபடும் தொடர்
(1) வான்மதி (2) உச்சித்திலகம்
(3) மணிக்கோபுரம் (4) சுவர்க்கடிகாரம்

**25.** கெடுதல் விகாரம் இடம்பெற்றுப் புணர்ந்தது
(1) ஊர்ப்பெயர் (2) மரவேர் (3) நிலாமுற்றம் (4) மலரிதழ்

**26.** அவன் நீதியுணர்வு உள்ளவன்.
அவன் தவறு செய்யமாட்டான்.
மேற்படி இரு வாக்கியங்களையும் இதே ஒழுங்கில் தர்க்கரீதியாக இணைப்பதற்குப் பொருத்தமான இணைப்பிடைச் சொல்
(1) ஆனால் (2) ஆகையால் (3) ஆயினும் (4) எனினும்

**27.** 'காகம்போல் அவன் விழுந்தவளின் வேலி ஓரமெல்லாம் கரைந்து திரிவானோ?'
இங்கு **விழுந்தவள்** என்பது
(1) படர்க்கை வினைமுற்று (2) தொழிற்பெயர்
(3) வினையாலணையும் பெயர் (4) பெண்பால் வினைமுற்று

**28.** அகராதி ஒழுங்கில் அமைந்த சொற்றொகுதி
(1) கள்ளம், கபடம், காடு, குரங்கு (2) வரம்பு, வயல், வாசல், வீடு
(3) தப்பட்டை, தப்பு, தாளம், தாரை (4) ஏகம், ஏகாந்தம், ஏகுதல், ஏங்குதல்

● **பொருத்தமற்ற** உதாரணம் இடம்பெற்றுள்ள சொற்றொகுதியைத் தெரிவுசெய்க.

**29.** (1) வேற்றுமைத்தொகை : மரச்சட்டம், மரவேர், கண்ணீர்
(2) வினைத்தொகை : ஆடுகதிரை, பாடுபொருள், காடுகரம்பை
(3) பண்புத்தொகை : முழுநிலவு, நீண்டபயணம், பழங்குடை
(4) உவமைத்தொகை : தேன்மொழி, மலர்முகம், நெருப்புப்பசி

**30.** (1) தன்மைவினை : வந்தேன், சென்றோம், பார்ப்பேன்
(2) முன்னிலைவினை : செய்வாய், ஓடுங்கள், ஒழிவாய்
(3) படர்க்கைவினை : ஆடுகிறான், ஓடுவான், படித்தான்
(4) வியங்கோள்வினை : வெல்க, ஒழியட்டும், செல்வாய்

● புள்ளிக்கோடிட்ட இடத்தை நிரப்புவதற்கு **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.

**31.** மாணவர்கள், நாடகத்துறையில் அனுபவ அறிவினைப் பெறுவதற்காக .................... ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
(1) கருத்தரங்கு (2) விரிவுரை (3) செயலமர்வு (4) கலந்துரையாடல்

**32.** 'கலைந்து, அலைந்து, உலைந்து' என .................... அமைந்த சொற்களைக் கவிஞன் தொடுத்தான்.
(1) மோனை (2) எதுகை (3) சிலேடை (4) முரண்

**33.** பிரபுக்களைப் புகழ்ந்து புலவர்கள் பாடிய பாடல்களிற் பெரும்பாலானவை வெறும் ………………… என்றே கொள்ளத்தக்கன.
(1) கீர்த்தனைகள் (2) மெய்க்கீர்த்திகள் (3) சிற்றிலக்கியங்கள் (4) புனைந்துரைகள்

**34.** "பாராளுமன்றத்திற் சமர்ப்பிக்கப்படவுள்ள, இந்த ஆண்டுக்கான ………………… ஏழை மக்களுக்குச் சார்பானதாக அமையும்" என்று நிதியமைச்சர் கூறினார்.
(1) பிரேரணை (2) பாதீடு (3) முன்மொழிவு (4) அறிக்கை

● வாக்கியங்களின் முற்பகுதிக்குப் **பொருத்தமான** முடிக்கும் பகுதியைத் தெரிவுசெய்க.

**35.** உழைக்கும் கரங்கள் உன்னதமானவை என்ற உண்மை ………………………………………
(1) உணரப்படவேண்டியன (2) உணரத்தக்கவை
(3) உணரத்தக்கன (4) உணரப்படவேண்டியது

**36.** உயர்தரத்திற் பயில்வதற்கு எங்களிற் பெரும்பாலானவர்கள் கணிதத்துறையையும் சிலர் விஞ்ஞானத்துறையையும் நான் கலைத்துறையையும் ………………………………
(1) தெரிவுசெய்தனர் (2) தெரிவுசெய்தோம்
(3) தெரிவுசெய்தார்கள் (4) தெரிவுசெய்தேன்

● கீழே தரப்பட்டுள்ள பாடலை அடிப்படையாகக் கொண்டு வினாக்களுக்கு விடை தருக.

கோவிலில் மணிகள் ஆர்ப்ப
குயிலினம் வரவு கூற
சேவல்கள் சிறகு கொட்டிச்
செகத்தினை விழிக்கச் செய்ய
பாவியர் உள்ளம் போலும்
கங்குலும் பதுங்கிக் கொள்ள
தேவர்க்கும் தேவனான
பகலவன் தேரில் வந்தான்

**37.** இப்பாடல் விவரிக்கும் பிரதான விடயம் யாது?
(1) பகற்பொழுது (2) உலகம் விழிப்படைதல்
(3) சூரியோதயம் (4) காலை நிகழ்ச்சிகள்

**38.** 'செகத்தினை விழிக்கச்செய்ய' என்ற தொடரில் 'செகம்' என்ற சொல்லால் உணர்த்தப்படுவது
(1) வானம் (2) உயிரினம் (3) இரவு (4) பொழுது

**39.** இங்கு கையாளப்பட்டுள்ள உவமையணியின் உவமான உவமேயங்களுக்கு இடையிலான பொதுத்தன்மை யாது?
(1) இருள் (2) ஒளி (3) அழகு (4) செம்மை

**40.** கீழே, சில வாக்கியங்கள் ஒழுங்கின்றிக் காணப்படுகின்றன. அவற்றை ஒழுங்குபெற வைத்தால், கட்டுக்கோப்பான பந்தியொன்று அமையும். அதற்குப் பொருத்தமான வைப்பு முறையைத் தெரிவுசெய்க.

அ - எனினும் அவர் கண்ட கனவுகள் இன்னும் நனவாகவில்லை.
ஆ - சமூக ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராக அவர் குரல் கொடுத்தார்.
இ - அந்த ஏற்றத்தாழ்வுகளும் மூடத்தனங்களும் இன்று அகன்றுவிட்டனவா?
ஈ - மூடத்தனங்களுக்கு எதிராகவும் குரல் கொடுத்தார்.
உ - மகாகவி பாரதியார் மறைந்து நூறு ஆண்டுகள் ஆகின்றன.

(1) உ, இ, ஈ, அ, ஆ (2) உ, ஈ, ஆ, அ, இ
(3) உ, அ, ஆ, ஈ, இ (4) உ, அ, ஈ, ஆ, இ

* *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

රහස්‍යයි
அந்தரங்கமானது

අ.පො.ස. (සා.පෙළ) විභාගය - 2020
க.பொ.த. (சா.தர)ப் பரீட்சை - 2020

| විෂය අංකය<br>பாட இலக்கம் | 22 | විෂයය<br>பாடம் | தமிழ்மொழியும் இலக்கியமும் |
|---|---|---|---|

I පත්‍රය - පිළිතුරු
I பத்திரம் - விடைகள்

| ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරෙහි අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරෙහි අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරෙහි අංකය<br>விடை இல. | ප්‍රශ්න අංකය<br>வினா இல. | පිළිතුරෙහි අංකය<br>விடை இல. |
|---|---|---|---|---|---|---|---|
| 01. | 4 | 11. | 1 | 21. | 4 | 31. | 3 |
| 02. | 1 | 12. | 2 | 22. | 3 | 32. | 2 |
| 03. | 2 | 13. | 3 | 23. | 2 | 33. | 4 |
| 04. | 2 | 14. | 4 | 24. | 3 | 34. | 2 |
| 05. | 1 | 15. | 2 | 25. | 2 | 35. | 4 |
| 06. | 1 | 16. | 2 | 26. | 2 | 36. | 2 |
| 07. | 3 | 17. | 3 | 27. | 3 | 37. | 3 |
| 08. | 3 | 18. | 1 | 28. | 4 | 38. | 2 |
| 09. | 2 | 19. | 3 | 29. | 2 | 39. | 1 |
| 10. | 3 | 20. | 2 | 30. | 4 | 40. | 3 |

විශේෂ උපදෙස් / விசேட அறிவுறுத்தல் } එක් පිළිතුරකට ලකුණු / ஒரு சரியான விடைக்கு **01** බැගින් / புள்ளி வீதம்

මුළු ලකුණු / மொத்தப் புள்ளிகள் **01 × 40 = 40**

---

පහත නිදසුනෙහි දැක්වෙන පරිදි බහුවරණ උත්තරපත්‍රයේ අවසාන කීරුවේ ලකුණු ඇතුළත් කරන්න.
கீழ் குறிப்பிடப்பட்டிருக்கும் உதாரணத்திற்கு அமைய பல்தேர்வு வினாக்களுக்குரிய புள்ளிகளை பல்தேர்வு விடைப்பத்திரத்தின் இறுதியில் பதிக.

| නිවැරදි පිළිතුරු සංඛ්‍යාව<br>சரியான விடைகளின் தொகை | 25/40 | I පත්‍රයේ මුළු ලකුණු<br>பத்திரம் I இன் மொத்தப்புள்ளி | 25/40 |
|---|---|---|---|

# தமிழ்மொழியும் இலக்கியமும் - II

**வினா 01 - சுருக்கவிடை வினாக்கள்**

1. சந்தி பிரித்து எழுதும் திறனை மதிப்பிடல்.
2. இலக்கண அறிவைப் பொருத்தமான இடத்தில் பிரயோகிக்கும் திறனை மதிப்பிடல்.
3. நடைமுறைத் தேவைகளுக்காக எழுதும் நுட்பங்களை மதிப்பிடல்.
4. மொழிவளம் தொடர்பான அறிவை மதிப்பிடல்.
5. குறியீடுகளைப் பொருத்தமான இடங்களில் இடுதலை மதிப்பிடல்.

**வினா 02 - கட்டுரை எழுதுதல்**

1. கொடுக்கப்பட்ட வழிகாட்டற் குறிப்புக்களை அடியொற்றி, பொருட் பொருத்தமாகவும் தேவையான அளவுக்கும் உரிய தலையங்கம் இட்டும் கட்டுரை எழுதும் திறனை மதிப்பிடல்.
2. கருத்துக்களை ஒழுங்குபடுத்திக் கட்டுக் கோப்பாக வெளிப்படுத்தும் திறனை மதிப்பிடல்.
3. வழுக்களின்றியும் வளமான மொழிநடையிலும் எழுதும் ஆற்றலை மதிப்பிடல்.
4. விளக்கி எழுதும் திறன், கற்பனை ஆற்றலுடன் எழுதும் திறன், கருத்துக்களை வெளிப்படுத்தி உரையாடல் பாங்கில் எழுதும் திறன், விவாதித்து எழுதும் திறன், கதை எழுதும் திறன் ஆகியவற்றைக் கணிப்பிடல்.
5. கட்டுரை வகை, கட்டுரை அமைப்பு என்பவற்றை அனுசரித்து, எடுத்துக்கொண்ட விடயம் பற்றிக் கட்டுரை நிறைவு பெறும் வகையில் எழுதும் திறனைக் கணிப்பிடல்.
6. குறிப்பிட்ட சொற்களுக்குள் எழுதப்பட்டுள்ளதா என்பதைக் கணிப்பிடல்.

**வினா 03 - சுருக்கம் எழுதுதல்**

1. உரைநடைப் பகுதியை வாசித்து கிரகித்து அதன் பிரதான கருத்து, துணைக்கருத்துக்கள் என்பவற்றை இனங்காணலை மதிப்பிடல்.
2. இனங்கண்ட கருத்துக்களைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் சொந்த மொழிநடையில் எழுதும் திறனை மதிப்பிடல்.
3. குறிப்பிட்ட அளவு சொற்களுக்குள் சாராம்சம் எழுதப்படுவதை மதிப்பிடல்.
4. உதாரணங்கள், மேற்கோள்கள், மேலதிக விளக்கங்கள், கூறியது கூறல் முதலியன சுருக்கத்தில் இடம்பெறக் கூடாது. இவற்றைத் தவிர்த்துச் சுருக்கம் எழுதப்பட்டுள்ளதா என அவதானித்து மதிப்பிடல்.
5. சுருக்கம் எழுத வேண்டிய முறையை அனுசரித்து எழுதுகின்றனரா என்பதைப் பரீட்சித்தல்.

**வினா 04 - கிரகித்தல்**

பாடப்பகுதியினை நன்கு வாசித்துக் கிரகித்துக் கேட்கப்பட்ட வினாக்களுக்குப் பொருத்தமாக விடையளிக்கும் திறனை மதிப்பிடல்.

**வினா 05 - கடிதம் /துண்டுப்பிரசுரம் எழுதுதல்**

1. கடிதத்திற்கான / துண்டுப் பிரசுரம் எழுதுவதற்கான அமைப்பு முறையை அனுசரித்து எழுதுந் திறனை மதிப்பிடல்.
2. வழங்கப்பட்ட வழிகாட்டற் குறிப்புக்களைக் கருத்திற்கொண்டு கடிதம் / துண்டுப் பிரசுரம் எழுதப்பட்டுள்ளதா என்பதைப் பரீட்சித்தல்.
3. மொழிநடையையும் வெளிப்பாட்டுத் திறனையும் மதிப்பிடல்.
4. குறிப்பிட்ட சொற்களுக்குள் எழுதப்பட்டுள்ளதா என்பதைக் கணிப்பிடல்.

# தமிழ்மொழியும் இலக்கியமும் - II

| | | |
|---|---|---|
| வினா இல. | 01. சுருக்க விடைகள் | - 20 புள்ளிகள் |
| | 02. கட்டுரை | - 25 புள்ளிகள் |
| | 03. சுருக்கம் | - 10 புள்ளிகள் |
| | 04. கிரகித்தல் | - 10 புள்ளிகள் |
| | 05. கடிதம் / துண்டுப்பிரசுரம் | - 15 புள்ளிகள் |
| | மொத்தம் | 80 புள்ளிகள் |

# பகுதி II

**1.** சுருக்கமான விடை எழுதுக.

(i) 'கணக்காயரில்லாதவூர்' எனும் சொற்றொடரைப் பிரித்தெழுதுக.

கணக்காயர் + இல்லாத + ஊர்

(ii) பின்வரும் வாக்கியத்துக்குப் பொருத்தமான நிறுத்தக்குறிகளை இட்டு, அதனை மீண்டும் எழுதுக.
விலகு பிள்ளை என்று சொல்ல முன்னமே விசுவநாதபிள்ளை விலகி இடங்கொடுத்தார்

"விலகு பிள்ளை" என்று சொல்ல முன்னமே விசுவநாதபிள்ளை விலகி இடங்கொடுத்தார்.
**அல்லது**
'விலகு பிள்ளை' என்று சொல்ல முன்னமே விசுவநாதபிள்ளை விலகி இடங்கொடுத்தார்.

(iii) சங்கப்பாடலை வைத்து, கவிஞரால் உருவாக்கப்பட்டதே இந்நாடகம்.
மேலே தரப்பெற்றுள்ள செயப்பாட்டுவினை வாக்கியத்தை செய்வினை வாக்கியமாக மாற்றி எழுதுக.

சங்கப்பாடலை வைத்து கவிஞர் உருவாக்கியதே இந்நாடகம்.

(iv) ஒவ்வொரு கலைக்கும் அவற்றுக்கே உரிய சில அடிப்படைப் பண்புகள் உள்ளன.
இவ்வாக்கியத்தை வழுநீக்கி எழுதுக.

ஒவ்வொரு கலைக்கும் அதற்கே உரிய சில அடிப்படைப் பண்புகள் உள்ளன.
**அல்லது**
ஒவ்வொரு கலைக்கும் அததற்கே உரிய சில அடிப்படைப் பண்புகள் உள்ளன.

(v) - பாரதியார் நவீன கவிதையின் முன்னோடி.
- பாரதியார் பாஞ்சாலி சபதம் பாடினார்.

மேற்படி இரண்டு வாக்கியங்களையும் ஒரு வாக்கியமாக்கி எழுதுக.

நவீன கவிதையின் முன்னோடியாகிய பாரதியார், பாஞ்சாலி சபதம் பாடினார்.
**அல்லது**
பாஞ்சாலி சபதம் பாடிய பாரதியார் நவீன கவிதையின் முன்னோடி.

(vi) 'அந்த அதிர்ச்சியான செய்தி கேட்டு உலகு கலங்கியது' - இதில் காணப்பெறும் ஆகுபெயரை இனங்கண்டு, அது எவ்வகை ஆகுபெயர் எனவும் குறிப்பிடுக.

ஆகுபெயர் – உலகு
இடவாகுபெயர்

(vii) 'அலை' என்ற சொல், பெயராகவும் வினையாகவும் அமையுமாறு ஒவ்வொரு வாக்கியம் எழுதுக.

பெயர் : கடலானது அலை அடித்து மிகவும் சத்தமிட்டது.
வினை : நீ வரும்வரை அலைந்து திரிந்தேன்.
(இவை போன்ற பொருத்தமான சரியான வாக்கியங்கள்)

(viii) பின்வரும் வாக்கியத்தில் காணப்பெறும் வினையடை யாது?
கரிய பெரிய யானைகள் பயங்கரமாக ஓடின.

பயங்கரமாக

(ix) அவன் என்னை நல்லவனாக எண்ணியிருந்தான்.
இந்த உடன்பாட்டு வாக்கியத்தை எதிர்மறை வாக்கியமாக மாற்றி எழுதுக.

அவன் என்னை நல்லவனாக எண்ணியிருக்கவில்லை / எண்ணவில்லை / எண்ணிலன்

(x) பந்தியின் முதன்மைக் கருத்தை உறுதியாகத் தெளிவுபடுத்தினார்.
இவ்வாக்கியத்தின் செயப்படுபொருள் யாது?

முதன்மைக்கருத்து

(02 x 10 = 20 புள்ளிகள்)

## வினா இல. 02 புள்ளித்திட்டம்

| | | |
|---|---|---|
| (அ) | பொருளமைவும் அளவும் | 12 புள்ளிகள் |
| (ஆ) | கருத்து வெளிப்பாடும் மொழிச் செம்மையும் | 06 புள்ளிகள் |
| (இ) | எழுத்து நுட்பங்கள் | 05 புள்ளிகள் |
| (ஈ) | தலையங்கம் | 02 புள்ளிகள் |
| | **மொத்தம்** | **25 புள்ளிகள்** |

### பொருளமைவும் அளவும்

அறிவுறுத்தல்கள், வழிகாட்டற் குறிப்புகள் என்பவற்றை அனுசரித்து பொருட்பொருத்தத்துடன் கேட்கப்பட்ட சொல் அளவில் கட்டுக்கோப்பாக எழுதப்படல். கருத்துக்களில் தொடர்ச்சி காணப்படல்.

### கருத்து வெளிப்பாடும் மொழிச் செம்மையும்

கருத்துக்களை தெளிவாக எடுத்துரைத்தல்.
பொருத்தமான மொழிப்பிரயோகம்.
சொல், வாக்கியம் எழுத்து வழுக்கள் இன்மை.
தேவைப்படுமிடத்து பொருத்தமான உதாரணங்கள், மேற்கோள்கள், ஆதாரங்கள் தந்து எழுதுதல்.

### எழுத்து நுட்பங்கள்

பந்தியமைப்பு, பந்திகளுக்கிடையே தொடர்புடைமை, குறியீடுகள் இடப்படல், உறுப்பமைவு, நேர்த்தி.

### தலையங்கம்

பொருத்தம், சுருக்கம், கவர்ச்சி.

புள்ளியிடல்

$$\text{உ+ம் Q2} = \frac{08}{12} + \frac{04}{06} + \frac{03}{05} + \frac{02}{02} = \frac{17}{25}$$

மேற்குறிப்பிட்ட 4 அம்சங்களின்கீழ் புள்ளிகளைப் பகுத்து வழங்குக.

**2.** பின்வருவனவற்றுள் **ஒன்றைத்** தெரிவுசெய்து, ஏறத்தாழ **250** சொற்களில் அமையுமாறு விடை எழுதுக. நீங்கள் தெரிவுசெய்த விடயத்துக்குப் பொருத்தமான தலையங்கம் இடுக.

(i) எமது நாடு சகல இயற்கை வளங்களும் நிறைந்த ஒரு நாடாகும். இன்றைய சூழ்நிலையில் இவ்வளங்களைப் பயன்படுத்திக்கொள்வது மிகவும் அவசியமாகும். விவசாயம், உள்ளூர் உற்பத்தி முதலான துறைகளை விருத்தி செய்வதன் மூலம் பொருளாதாரத்தில் தன்னிறைவு பெற முடியும். இது தொடர்பான ஒரு **விளக்கக் கட்டுரை.**

(ii) மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ள ஊடகங்களுள் தொலைக்காட்சி முக்கியமானதாகும். அதில் பல்வேறு அலைவரிசைகளினூடாக பல்வேறு விதமான நிகழ்ச்சிகள் ஒளிபரப்பாகின்றன. அந்நிகழ்ச்சிகளால் நன்மைகளே பெரிதும் ஏற்படுகின்றன எனக் கருதும் ஒருவருக்கும் தீமைகளே பெரிதும் ஏற்படுகின்றன எனக் கருதும் மற்றொருவருக்குமிடையிலான ஒரு **உரையாடல்.**

(iii) சமுதாயத்தில் ஒருவர் உயர்ந்தவராகக் கருதப்படுவதற்கு, பதவி, படிப்பு, பணம் எனப் பல காரணங்கள் உள்ளன. இவற்றுள் ஒன்றோ பலவோ இருப்பதனால் மட்டுமே ஒருவர் உயர்ந்தவராகக் கருதப்படமாட்டார். இவற்றோடு நற்பண்பும் உடைய ஒருவரே பிறரால் மதிக்கப்படுவார். இக்கருத்தை விளக்கும் வகையிலான ஒரு **மேடைப்பேச்சு.**

(iv) இன்று என் வாழ்வில் மறக்கமுடியாத ஒருநாள். கடல்கோளால் என் கிராமம் சிதைந்துவிட, உயிரைக் கையில் பிடித்தபடி ஓடி... ஆறு ஆண்டுகளின் பின் இன்றுதான் என் சொந்த ஊருக்குத் திரும்புகிறேன்... அந்த ... அந்தக் கொடிய நாளை நினைத்தாலே நெஞ்சு பதறும்... - என்ற வகையில் தொடங்கி அனுபவங்களை விவரிப்பதான ஒரு **சிறுகதை.**

i.

- எமது நாட்டில் காணப்படும் வளங்கள்
- வளங்களின் முக்கியத்துவம்
- வளங்களைப் பொறுப்போடும் புத்திசாலித்தனத்தோடும் பயன்படுத்தலின் அவசியம்
- தற்போதைய பொருளாதார வீழ்ச்சிப்போக்கு
  (போக்குவரத்துத் தடை, இறக்குமதி இன்மை, பொருட்கள் தட்டுப்பாடு)
- உள்ளூர் உற்பத்திக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதன் அவசியம்
  (இஞ்சி, மிளகு, உழுந்து, மஞ்சள் முதலியன)
- குடிசைக் கைத்தொழிலை விருத்தி செய்ய வேண்டியதன் அவசியம்
- விலங்கு வேளாண்மையின் அவசியம்

**மாதிரித் தலைப்புகள் :** தன்னிறைவுப் பொருளாதாரம்
பொருளாதாரத்தில் தன்னிறைவு

